# ॥ निर्वाणषट्कम् ॥

## நிர்வாணஷட்கம்

(1)

मनोबुद्ध्यहङ्कारचित्तानि नाहं
न कर्णं न जिह्वा न घ्राणनेत्रे ।
न च व्योम भूमिर्न तेजो न वायुः
चिदानन्दरूपः शिवोऽहं शिवोऽहम् ॥

மனோ புத்யஹங்கார சித்தா நி நாஹம்
ந கர்ணம் நஜிஹ்வா நக்ராண நேத்ரே ।
ந ச வ்யோம பூமிர்ந தேஜோ நவாயு:
சிதானந்த ரூப: சிவோ஽ஹம் சிவோ஽ஹம் ॥

மனது, புத்தி, அஹங்காரம், சித்தம் இந்நான்கும் நானல்ல. காது, நாக்கு, மூக்கு, கண் இவையும் நானல்ல. ஆகாயம், பூமி, தேஜஸ், வாயு இவையும்கூட நானல்ல. பின் சித் - ஆனந்தம் என்று குறிக்கப்படும் 'சிவனே நான், சிவனே நான்'

(2)

न च प्राणसंज्ञो न वै पञ्चवायुः
न वा सप्तधातु र्न वा पञ्चकोशः ।
न वाक्, पाणिपादौ न चोपस्थपायू
चिदानन्दरूपः शिवोऽहं शिवोऽहम् ॥

ந ச ப்ராணஸம்ஜ்ஞோ நவை பஞ்சவாயு:
ந வாஸப்ததாது: ந வா பஞ்சகோச: ।
ந வாக், பாணிபாதௌ நசோபஸ்தபாயூ
சிதானந்தரூப: சிவோ஽ஹம் சிவோ஽ஹம் ॥

ப்ராணனும் நானல்ல, ஐந்து வகை மூச்சுகளும் நானல்ல. ஏழுவித தாதுக்களோ, ஐந்து வித கோசங்களோ கூட நானல்ல. வாக், கால், கைகள், குஹ்யம் அல்லது குதம் இவையும் நானல்ல. பின் பேரானந்த வடிவான சிவனே நான் - சிவனே நான்.

(3)

न पुण्यं न पापं न सौख्यं न दुःखं
न मन्त्रो न तीर्थं न वेदा न यज्ञाः।
अहं भोजनं नैव भोज्यं न भोक्ता
चिदानन्दरूपः शिवोऽहं शिवोऽहम् ॥

ந புண்யம் நபாபம் நஸௌக்யம் நது:கம்
ந மந்த்ரோ நதீர்த்தம் நவேதா நயஜ்ஞா: ।
அஹம் போஜநம் நைவ போஜ்யம் நபோக்தா
சிதானந்தரூப: சிவோऽஹம் சிவோऽஹம் ॥

புண்யமோ பாபமோ, சௌக்யமோ, துன்பமோ நானில்லை.மந்த்ரம், தீர்த்தம், வேதங்கள், யாகங்கள் இவையும் நான் ஆக மாட்டாது. போஜனம், சாப்பிடும் பொருள் அல்லது சாப்பிடுபவன் இவையும் நான் ஆக மாட்டாது. பின் பேரறிவே யுருவான ஆனந்தம் அதுவே சிவன். சிவனே நான்.

(4)

नमृत्यु र्न शङ्का न मे जातिभेदः
पिता नैव मे नैव माता च जन्म।
न बन्धुर्न मित्रं गुरुर्नैव शिष्यः
चिदानन्दरूपः शिवोऽहम् शिवोऽहम् ॥

ந ம்ருத்யுர் ந சங்கா நமே ஜாதிபேத:
பிதா நைவமேநைவ மாதா ச ஜன்ம ।
ந பந்துர்ந மித்ரம் குருர்நைவ சிஷ்ய:
சிதானந்தரூப: சிவோऽஹம் சிவோऽஹம் ॥

ம்ருத்யு என்ற மரணமோ, இல்லை நான் என்பது. இதுவா என்ற சங்கையும் இல்லை. என் விஷயத்தில் ஜாதி பேதமில்லை. தந்தையும் தாயுமில்லை. ஏன் 'எனக்கு' பிறப்பே இல்லை. உறவினர் இல்லை. நண்பரும் இல்லை. குருவும் இல்லை. சிஷ்யனும் நானில்லை. பின் சித் - ஆனந்த வடிவமான சிவனே நான். நான் சிவனே.

(5)

अहं निर्विकल्पो निराकाररूपो
विभुत्वाच्च सर्वत्र सर्वेन्द्रियाणाम्।
नचासङ्गतं नैव मुक्तिर्न बन्धः
चिदानन्दरूपः शिवोऽहम् शिवोऽहम्॥

அஹம் நிர்விகல்போ நிராகாரரூபோ
விபுத்வாத்ச ஸர்வத்ர ஸர்வேந்த்ரியாணும்।
ந சாஸங்கதம் நைவ முக்திர் ந பந்த:
சிதானந்த ரூப: சிவோऽஹம் சிவோऽஹம்॥

நான் இதுவோ அதுவோ என்றபடி விகல்பம் இல்லை. வடிவம் தோற்றம் இல்லை. எங்கும் நிறைந்துள்ளதால் எல்லா புலன்களிலும் எல்லா இடங்களிலும் 'அஹம்' பதப்பொருளான ஆத்மா உள்ளது. அது ஒன்றோடு சேராததுமில்லை. முக்தி - பந்தம் என்பதுமில்லை ஆத்மாவுக்கு. சுருக்கமாக பேரறிவாகவும், பேரானந்தமாகவும் உள்ள சிவனே நான். நானே சிவன்.

(6)

न मे द्वेषरागौ न मे लोभमोहौ
मदो नैव मे नैव मात्सर्यभावः।
न धर्मो न चार्थो न कामो न मोक्षः
चिदानन्दरूपः शिवोऽहम् शिवोऽहम्॥

நமே த்வேஷராகௌ நமே லோப மோஹௌ
மதோ நைவமே நைவ மாத்ஸர்யபாவ:।
நதர்மோ நசார்த்தோ ந காமோ நமோக்ஷ:
சிதானந்த ரூப: சிவோऽஹம் சிவோऽஹம்॥

'எனக்கு' வெறுப்போ, விருப்போ இல்லை. லோப - மோஹங்களும் இல்லை. மதம் இல்லை. மாத்ஸர்யமும்தான் இல்லை. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் இவையும் நானில்லை. பின் பேரறிவு - பேரானந்தம் எனப்படும் சிவனே நான். சிவனே நான்.

**நிர்வாணஷட்கம் முற்றிற்று**